[5th April 1958

THE HON. SRI R. VENKATARAMAN : அதற்கான முயற்சிகள்தான் நடக்கிறது. இப்பொழுது 5,000 ஏக்கரில் டாபியோக்கா நம் ராஜ்யத்தில் உற்பத்தி செய்ய முயற்சி எடுத்து வரப்படுகிறது.

SRI A. GOVINDASAMY : இந்த மரவள்ளி பயிரிடுகிறவர்களுக்கு அரசாங்கம் என்ன சலுகை செய்திருக்கிறது, அல்லது அவர்களுக்கு என்ன சலுகை செய்ய உத்தேசித்திருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்பொழுதுதான் சொன்னேன், அதிகமாக உற்பத்தி செய்வதற்கு 5,000 ஏக்கர் ஒதுக்கி வைத்து சாகோ மான்யுபாக்சரிங் அஸோஸியேஷனுக்கு நாமினல் ரேட்டில், ஏதோ பெயரளவில் குத்தகை வாங்கிக்கொண்டு கொடுக்க ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது.

SRI M. KALYANASUNDARAM : இந்த கிழங்கை அதிகமாக உற்பத்தி செய்வதற்கு முன் வருவதற்கு வேண்டி குறைந்த பட்ச விலை நிர்ணயிப்ப தற்கு சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : A separate question may be put, Sir.

### *Jeeps*

* 573 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Electricity be pleased to state the number of jeeps retrenched in the various departments in pursuance of the recommendations made by the Special Officer for Jeeps Enquiry?

THE HON. SRI V. RAMIAH : Seventeen jeeps have been recommended to be retrenched in the various departments. Orders have since issued for retrenching four of them. As regards others, the matter is under consideration of the Government.

SRI M. KALYANASUNDARAM : தேவையில்லாத இடங்களில் இருந்து எடுக்கப்பட்ட ஜீப்களை தாசில்தார்களுக்கு கொடுக்க சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI V. RAMIAH : எந்த ஜீப்பும் இதுவரை எடுக்கப்பட வில்லை. எப்படி அவைகளை எடுக்கலாம் என்பது பற்றி சம்பந்தப்பட்ட இலாகாக பரிசீலித்து முடிவு செய்யும்.

SRI S. NAGARAJA MONIGAR : இந்த நாடு முன்னேறுவதற்கு சமீப காலத்தில் ஜீப்கள் நமக்கு அளவுகடந்த உதவியாக இருக்கிறது. ஆங்காங்கு சிலவைகள் சரியாக உபயோகப்படுத்தவில்லை . . .

MR. SPEAKER : The hon. Member is giving his opinion. Let him put the question.

SRI S. NAGARAJA MONIGAR : I am putting the question, Sir.

MR. SPEAKER : No, you are not. Please put it as a question.

SRI S. NAGARAJA MONIGAR : ஆங்காங்கு சிலவைகள் சரியாக உபயோகப்படுத்தவில்லை என்று இருந்தாலும் ஜீப்களை நிறுத்தி இன்னும் அதிகமாக தாசில்தார் போன்றவர்களுக்கு கொடுத்து நாட்டின் முன்னேற்றத் திற்காக எவ்வளவு செலவு வந்தாலும் அதைச் செலவு செய்வார்களா ?

5th April 1958]

THE HON. SRI V. RAMIAH : நாட்டின் முன்னேற்றத்தை தடை செய்யாமல் வேண்டிய ஜீப்புகள் வேண்டிய அளவு கொடுக்க சர்க்கார் எப்பொழுதும் தயாராயிருக்கிறது.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : ஒரு டிபார்ட்மெண்டி லிருந்து மற்றதொரு டிப்பார்ட்மெண்ட்டிற்கு மாற்றுவதை ரிட்ரெஞ்ச் மெண்ட் என்று நினைக்கிறீர்களா ?

THE HON. SRI V. RAMIAH : உபரியாக இருக்கக்கூடிய ஜீப்களை ஒரு இடத்தில் சேகரித்து வைத்து எப்பொழுது எந்தெந்த இலாகாவிற்குத் தேவையோ அப்படிக் கொடுப்பதுதான் நன்ருகயிருக்கும்.

SRI M. KALYANASUNDARAM : ஜில்லா போலீஸ் அதிகாரிகளிடம் இருக்கும் ஸ்டேஷன் வாகன்களை குறைக்கும் யோசனை சர்க்காருக்கு உண்டா ?

THE HON. SRI V. RAMIAH : தனி கேள்வி போட வேண்டும்.

SRI A. GOVINDASAMY : ப்ளாக் டெவலப்மெண்ட் ஆபீஸர்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கும் ஜீப்களை "வித்ட்ரா" செய்ய வேண்டுமென்று பல்வந்தராய் மேத்தா அவர்களின் யோசனையை சர்க்கார் ஏற்றுக்கொண் டிருக்கிறதா ?

THE HON. SRI V. RAMIAH : அதையெல்லாம் மனதில் வைத்துத் தான் ஸ்பெஷல் ஆபீஸர் பரிசீலனை செய்து சிபார்சு செய்திருக்கிருர்கள்.

SRI K. PERIANNAN : இம்மாதிரி ஜீப்களை ஜில்லா ஹரிஜன அதிகாரிகளுக்கு கொடுத்து ஜில்லாவில் உள்ள ஹரிஜன மக்களின் குறைகளை நிவர்திக்க சர்க்கார் யோசிக்குமா ?

THE HON. SRI V. RAMIAH : எந்தெந்த அதிகாரிகளுக்கு தேவையோ அவர்களுக்கு கொடுக்க வேண்டுமென்ற அடிப்படையில்தான் ஜில்லாவில் இருக்கக்கூடிய எல்லா ஜீப்களையும் ஒரு இடத்தில் சேகரித்து தேவைக்குத் தகுந்தவாறு கொடுக்கப்படும்.

*Community Development Projects*

* 574 *Q.*—SRI G. ANNAMALAI MUTHURAJA : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether there is any proposal to include Ilupur and Viralimalai areas of the Tiruchirappalli district under the Community Development Project; and

(*b*) if so, when?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) It is not possible now to say when the National Extension Service Scheme will be extended to the areas in question. They will have to wait for their turn.

SRI G. ANNAMALAI MUTHURAJA : கிராம அபிவிருத்தி திட்டங்களை ஏற்படுத்துவதற்காக வேண்டிய ஆபீஸ்களை அதிகமாக பிற்போக் கான இடங்களில் ஏற்படுத்த வேண்டியிருக்கிறது. இவ்விதம் இப்போது செய்யப்படுவதில்லை. உதாரணமாக திருச்சியிலிருந்து விராலிமலை, இலுப்பூர் போன்ற இடங்களுக்கு செல்லும் 25 மைல் தூரமும் ஒரே காடாக இருந்து கொண்டிருக்கிறது. அப்பேர்ப்பட்ட இடங்களில் போகும் போது அமைச்சர் அவர்களுக்கும் நன்ருக இது தெரிந்திருக்கும் என்று நம்புகிறேன் , . . .